# ॥ कालभैरवाष्टकम् ॥

## காலபைரவாஷ்டகம்

(1)

देवराजसेव्यमानपावनाङ्घ्रिपङ्कजं
व्यालयज्ञसूत्रमिन्दुशेखरं कृपाकरम् ।
नारदादियोगिबृन्दवन्दितं दिगम्बरं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

தேவராஜஸேவ்யமான பாவனாங்க்ரி பங்கஜம்
வ்யாலயஜ்ஞஸூத்ரமிந்து சேகரம் க்ருபாகரம் ।
நாரதாதி யோகிப்ருந்த வந்திதம் திகம்பரம்
காசிகா புராதிநாத காலபைரவம் பஜே ॥

இந்திரன் சேவிக்கும் திருவடிகளையுடையவரும், சர்பயஜ்ஞோபவீதமும் சந்திரனையும் தரித்து அருள் பாலிப்பவரும், நாரதர் முதலிய யோகியரால் வணங்கப்பட்டவரும், திகம்பருமான காசிநகரத்தை பாலித்தருளும் காலபைரவரை சேவிக்கிறேன்.

(2)

भानुकोटिभास्वरं भवाब्धितारकं परं
नीलकण्ठमीप्सितार्थदायकं त्रिलोचनम् ।
कालकालमम्बुजाक्षमस्तशून्यमक्षरं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

பானுகோடி பாஸ்வரம் பவாப்திதாரகம் பரம்
நீலகண்ட மீப்ஸிதார்த்த தாயகம் த்ரிலோசனம் ।
கால காலமம்புஜாக்ஷ மஸ்த சூன்ய மக்ஷரம்
காசிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

காசிபுரத்து காவல் தெய்வமான காலபைரவரை சேவிக்கிறேன். அவர் பல்லாயிரம் சூர்யர்கள் போல் பிரகாசிப்பவர், சம்சாரக் கடலிலிருந்து கடத்தேறுவிப்பவர், நீலகண்டர், விரும்பியதை யருள்பவர், முக்கண்ணர். காலகாலர், தாமரையொத்த கண்ணினர். பரிபூர்ண - அக்ஷரமானவர்.

(3)

शूलटङ्कपाशदण्डपाणिमादिकारणं
श्यामकायमादिदेवमक्षरं निरामयम् ।
भीमविक्रमं प्रभुं विचित्रताण्डवप्रियं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

சூலடங்கபாச தண்ட பாணிமாதி காரணம்
ச்யாமகாய மாதிதேவமக்ஷரம் நிராமயம் ।
பீமவிக்ரமம் ப்ரபும் விசித்ர தாண்டவப்ரியம்
காசிகா புராதிநாத கால பைரவம் பஜே ॥

சூலம், உளி, பாசம், தண்டம் இவற்றை கையில் தரித்து, ஆதி காரணமாய், கருத்த மேனியராய், குறைவில்லாத அக்ஷரமாய், பயங்கர நெறிமுறைகள் கொண்ட ப்ரபுவாய், விசித்ரமான தாண்டவம் புரிபவராய்த் திகழும் காசீகாலபைரவரை சேவிக்கிறேன்.

(4)

भुक्तिमुक्तिदायकं प्रशस्तचारुविग्रहं
भक्तवत्सलं स्थिरं समस्तलोकविग्रहम् ।
निक्वणन्मनोज्ञहेमकिङ्किणीलसत्कटिं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

புக்திமுக்தி தாயகம் ப்ரசஸ்தசாரு விக்ரஹம்
பக்தவத்ஸலம் ஸ்திரம் ஸமஸ்தலோக விரக்ரஹம் ।
நிக்வணன் மனோஜ்ஞ ஹேம கிங்கிணீ லஸத்கடிம்
காசிகா புராதிநாத காலபைரவம் பஜே ॥

காசீ க்ஷேத்ர காலபைரவர் போகம், மோக்ஷம் இரண்டையும் அருள்பவர். அழகிய உருவங் கொண்டவர். அடியாரிடத்தில் அன்பு பூண்டவர். உறுதியாய் ஸகல லோகமும் வடிவாய் அமைந்தவர். ஒலியெழுப்பும் தங்கமயமான அரைச் சதங்கையணிந்தவர். அவரை நான் சேவிக்கிறேன்.

(5)

धर्मसेतुपालकं त्वधर्ममार्गनाशकं
कर्मपाशमोचकं सुशर्मदायकं विभुम् ।
स्वर्णवर्णकेशपाशशोभिताङ्गनिर्मलं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

தர்மஸேதுபாலகம் த்வதர்மமார்க நாசகம்
கர்மபாசமோசகம் ஸுசர்மதாயகம் விபும் ।
ஸ்வர்ணவர்ணகேசபாச சோபிதாங்கநிர்மலம்
காசிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

தர்மமாகிய பாலத்தைப் பாதுகாப்பவர். அதர்ம வழியை ஒழிப்பவர். கர்ம பந்தமில்லையெனச் செய்பவர். க்ஷேமத்தை யருள்பவர். எங்கும் இருப்பவர். தங்கமயமான கேசங்கள் கொண்டவர். தூய வடிவினாரான காசீ காலபைரவரை வழிபடுகிறேன்.

(6)

रत्नपादुकाप्रभाभिरामपादयुग्मकं
नित्यमद्वितीयमिष्टदैवतं निरञ्जनम् ।
मृत्युदर्पनाशनं करालदंष्ट्रभूषणं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

ரத்னபாதுகா ப்ரபாபிராம பாதயுக்மகம்
நித்ய மத்விதீயமிஷ்ட தைவதம் நிரஞ்ஜனம் ।
ம்ருத்யுதர்பநாசனம் கரால தம்ஷ்ட்ரபூஷணம்
காசிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

வைரமிழைத்த பாதுகைகள் அணிந்திருப்பதால் கால்கள் மிகவும் அழகாயிருக்கின்றன. மேலும், அவர் நித்யமான இஷ்ட தெய்வம். இரண்டாகக் கொள்ளப்படாதவர், யமனின் கொட்டத்தையடக்கியவர், பயங்கர தெற்றிப் பற்கள் அவருக்கு அழகாயுள்ளன. அப்படிப்பட்ட காசீ காலபைரவரை சேவிக்கிறேன்.

(7)

अट्टहासभिन्नपद्मजाण्डकोशसंततिं
दृष्टिपातनष्टपापजालमुग्रशासनम् ।
अष्टसिद्धिदायकं कपालमालिकाधरं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

அட்டஹாஸபின்ன பத்மஜாண்டகோசஸந்ததிம்
த்ருஷ்டிபாத நஷ்ட பாபஜாலமுக்ரசாஸனம் ।
அஷ்டஸித்தி தாயகம் கபால மாலிகா தரம்
காசிகா புராதிநாத கால பைரவம் பஜே ॥

அட்டஹாஸம் செய்து பிரம்மனின் அண்டகோசகூட்டை யுடைத்தவரும், பார்த்த மாத்திரத்தில் பாபங்களையழிப்பவரும், பயங்கரமான கட்டளைகளை யுடையவரும், கபால மாலையணிந்து அஷ்டசித்திகளை வழங்கி வரும் காசீ காலபைரவரை சேவிக்கிறேன்.

(8)

भूतसंघनायकं विशालकीर्तिदायकं
काशिवासिलोकपुण्यपापशोधकं विभुम् ।
नीतिमार्गकोविदं पुरातनं जगत्पतिं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥

பூதஸங்கநாயகம் விசால கீர்த்திதாயகம்
காசிவாஸிலோக புண்யபாப சோதகம் விபும் ।
நீதிமார்ககோவிதம் புராதநம் ஜகத்பதிம்
காசிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

பூதகணங்களுக்கு அவர் நாயகர். பரந்த கீர்த்தி தருபவர். காசியில் வாழும் மக்களின் புண்யபாபங்களை ஆராய்பவர். எங்குமிருப்பவர். நீதிமார்க்கம் தெரிந்தவர். பழமையான உலகத்தலைவர். இவ்வாரான காசி கால பைரவரை சேவிக்கிறேன்.

(9)

कालभैरवाष्टकं पठन्ति ये मनोहरं
ज्ञानमुक्तिसाधकं विचित्रपुण्यवर्धनम् ।
शोकमोहलोभदैन्यकोपतापनाशनं
ते प्रयान्ति कालभैरवाङ्घ्रिसन्निधिं ध्रुवम् ॥

காலபைரவாஷ்டகம் படந்தி யே மனோஹரம்
ஜ்ஞானமுக்திஸாதகம் விசித்ரபுண்யவர்த்தனம் ।
சோகமோஹ லோபதைன்யகோப தாப நாசனம்
தே ப்ரயாந்தி காலபைரவாங்க்ரி ஸந்நிதிம்த்ருவம்॥

அழகான இந்த கால பைரவாஷ்டகத்தைப் படிப்பவர், ஞானம், முக்தியுடன் பற்பல புண்யங்களையும் அடைவர். துக்கம், மோஹம், லோபம், ஏழ்மை, கோபம் தாபம் நீங்கி கால பைரவர் ஸந்நிதியை நிச்சயம் அடைவர்.

காலபைரவாஷ்டகம் முற்றிற்று

